REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர். அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: மார்கழி 7உ புதன் (22—12—54) ★ ★ வெளியூர்: மார்கழி 8உ வியாழன் (23—12—54) [இதழ் 164

## குவாலியர் போலீஸ் அடையாள உண்ணாவிரதம்!

குவாலியர், டிச. 20—

குவாலியர் மாவட்ட போலீசைச் சேர்ந்த இரண்டு ஹெட்-கான்ஸ்டபிள்கள் சென்ற சனிக்கிழமையன்று அடையாள உண்ணாவிரதம் இருந்தனர் என்று தெரிகிறது. ஹில்புரி என்ற நகரில், இவர்கள், அதிகச் சம்பளம், சிறந்த வேலை நிலைமைகள் கோரி உண்ணாவிரதம் இருந்தார்களாம். நேற்றிரவு அவர்கள் உண்ணாவிரதத்தைக் கைவிட்டனர் என்று தெரிகிறது.

இவர்கள் தங்கள் அடையாள உண்ணாவிரதத்தை ஆரம்பிக்கு முன்னர், மாவட்ட போலீஸ் அதிகாரியிடம் தங்கள் கோரிக்கைகளை நேரில் கொடுத்தனர் என்று தெரிகிறது.

# வட நாட்டுக்கு தென்னாட்டின் மீது ஆதிக்கம் ஏன்?

## அடிக்கடி டில்லிக்கு ஓடும் சென்னை அமைச்சர்களின் பரிதாபம்!

## டில்லியில் அதிகாரத்தைக் குவிப்பது பற்றி சக்கரைச் செட்டியார் எச்சரிக்கை

"வடநாட்டு மக்கள், தென்னாட்டு மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதை நான் விரும்பவில்லை; உண்மையைச் சொல்ல வேண்டுமானால், இப்போது சென்னையில் ஆட்சி புரியும் சர்க்கார் அதன் கட்சிக்குள்ளே நிலவும் நிலையற்ற தன்மையினால், மத்திய சர்க்காரின் தயவில் இருக்கிறது,"

—இவ்வாறு, தோழர் சக்கரை செட்டியார் அவர்கள், இந்தியப் பாராளு மன்றம், அத்தியாவசியப் பொருள்கள் பற்றி நிறைவேற்றியுள்ள மூன்றாவது திருத்த மசோதாவை அங்கீகரிக்க வேண்டும் என்று அமைச்சர் பக்தவத்சலம் சென்னை மேல்சபையில் பிரரேபித்த தீர்மானத்தின் மீது பேசுகையில் குறிப்பிட்டார்.

மேலும் அவர் சொன்னார்:—

"இதன் மூலம் மாநில சர்க்காரின் அதிகாரங்கள், நிரந்தரமாக டில்லி சர்க்காரிடம் தரப்படுகிறது; இப்போக்கு மிகவும் தவறானது;

"காங்கிரஸ் கட்சி அதிகாரத்தில் இருக்க வேண்டுமா என்பதைக் கூட இப்போதைய சர்க்காரினால் தீர்மானிக்க இயலவில்லை; டில்லியில் உள்ளவர்களுடன் கலந்துபேச இம்மாநில அமைச்சர்கள் டில்லிக்கு ஓடுகிறார்கள்; அதனால்தான், இம்மாநில சர்க்கார், தன் அதிகாரங்களை டில்லியிடம் கொடுக்கக்கூடாது என்று நான் ஆட்சேபிக்கிறேன்;

"துரதிருஷ்ட வசமாக நமது சர்க்காரின் உள்ளம், இன்னும் மற்றவரின் தயவை எதிர்பார்ப்பதாகவே இருக்கிறது; அமெரிக்காவிலுள்ள மாநிலங்கள் போல் இந்தியாவில் உள்ள மாநிலங்கள் அனைத்திற்கும் ஒரே தரமுள்ள மதிப்பு இல்லை. இதற்கு சரித்திரச் சூழ்நிலைகள் காரணமாக இருக்கலாம். இங்கே மாநிலங்களுக்கான அதிகாரங்களை மத்திய சர்க்கார் வழங்கியிருக்கிறது. அமெரிக்காவிலுள்ள மாநிலங்கள், மத்திய சர்க்காருக்கு அதிகாரங்களை வழங்குவதற்கு முன்னர், மாநாடு ஒன்றை கூட்டி யோசித்தன; இந்த நிலையின் காரணமாகத்தான், மாநிலங்களின் மிக மிக முக்கியமான அதிகாரங்களில் மத்திய சர்க்கார் தலையிடும் போதுகூட (இப்போக்கை எதிர்த்து) அம்மாநிலங்கள், தங்கள் உணர்ச்சியை போதுமான அளவு எழுப்ப முடியவில்லை," என்றார்.

"மாநிலங்களின் அதிகார எல்லையில் தலையிடும் போக்கு இது; பிரிட்டிஷாரின் ஆட்சியில் கூட மாநிலங்களுக்கு அதிக சுதந்திரம் இருந்தது,"

என்று எம். பி. கோவிந்தமேனன் கூறி மசோதாவை எதிர்த்தார்.

(4-ம் பக்கம் பார்க்க)

## குகையில் கள்ளச் சாராயம்

### போலீசாரை ஏமாற்ற புது வழி

சூரத், டிச. 20—

சர்க்காரின் சட்டத்தை மீறி மது வகைகள் தயாரிப்போர், புதிய முறைகளை கையாளுகின்றனர்.

சூரத் அருகே மோரா என்னும் கிராமத்தில், கிணறு ஒன்றில் 20 அடி ஆழத்தில் பல குகைகள் இருப்பதை போலீசார் கண்டனராம்.

ஒரே கிணற்றில் உள்ள பல குகைகளில், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குச் செல்ல வசதியளிக்கும் பொருட்டு கயிற்றினால் அவைகளிடையே தொடர்பு ஏற்படுத்தப் பட்டிருந்ததாம்.

குகைகளில் தயாரிக்கப்பட்ட மதுவகைகளும், அவற்றைத் தோண்ட பயன்படும் கருவிகளும், மதுவகைகளை தயாரிக்க வேண்டிய கருவிகளும் காணப்பட்டன என்று தெரிகிறது.

## மாணவர்களிடம் மன்னிப்புக் - கேட்க மாணவியின் மறுப்பு

## கல்லூரி மாணவர்கள் அறப்போர்

சில்சார், டிச. 20—

நவ்காஸ் கல்லூரி மாணவர்களில் சிலர், மாணவி ஒருவரிடம் தகாத முறையில் நடந்து கொண்டார்களாம். அந்த மாணவி, இதை எதிர்த்து மாணவர்களை தக்க முறையில் கண்டித்துப் பேசியதாகத் தெரிகிறது.

மாணவி, தங்களை அவமானப் படுத்திவிட்டதாக கல்லூரித் தலைவரிடம் மாணவர்கள் புகார் செய்தனர்; கல்லூரித் தலைவர் மாணவர்களிடம் மன்னிப்புக் கோருமாறு மாணவியிடம் கோரினார்.

ஆனால், மாணவர்களிடம் மன்னிப்புக் கேட்க அந்த மாணவி மறுத்துவிட்டார்.

இதனால், முதல் வகுப்பு மாணவர்கள் கோபங்கொண்டு, சென்ற சில நாட்களாக கல்லூரிக்குச் செல்லாமல் வேலை நிறுத்தம் செய்கிறார்கள் என்று தெரிகிறது.

## 145 வயதுள்ள பாட்டிமார்கள்!

## ரஷ்யாவில் இருக்கின்றனர்

லண்டன், டிச. 20—

சோவியத் ரஷ்யாவில் 136 வயதுடைய ஒருவர் இன்னும் திடகாத்திரத்துடன் இருக்கிறார் என்று கூறப்படுகிறது.

சேபிப்ரம் காபிதாஷ் விலி என்னும் பெயருடைய இவர் 1818-ம் ஆண்டில் பிறந்தார் என்று ரஷ்யா அறிவித்தது.

இவர் ஜார்ஜியாவைச் சேர்ந்தவராம்.

ஆனால் அவரைவிட அதிக வயதான ஒருவர், ஆசர் பைஜானில் இருக்கிறார். மத்யுஷால் என்ழைக்கப்படும் இவருக்கு 143 வயதாகிறதாம்; இவரது மனைவிக்கு 130-க்கு மேல் வயதாகிறதாம்.

இவருக்கு குழந்தைகள், பேரப்பிள்ளைகள் உள்பட சுமார் 118 பேர்கள் இருக்கிறார்கள் என்று தெரிகிறது,

இவர்களுக்கெல்லாம் தாத்தா எனப்படும் சிலரும் உயிருடன் ரஷ்யாவில் இருக்கிறார்களாம்.

குர்கன் என்னும் கிராமத்தில் 145 வயதுடைய பாட்டிமார்கள் இரண்டு பேர் இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

சோவியத் யூனியனில் 90 வயதுக்கு மேற்பட்டவர்கள் சுமார் 40,000 பேர் இருக்கிறார்களாம்.

## 'ரிக்ஷா இழுக்க அனுமதி தாருங்கள்'

## பஞ்சாப் சர்க்கார் ஊழியர்கள் கோரிக்கை

### அதிக வருவாய் பெற முயற்சி

சாந்திகார், டிச. 20—

சர்க்கார் காரியாலயங்களில் வேலை செய்யும் சர்க்கார் ஊழியர்கள், ஓய்வு நேரங்களில், இன்சூரன்ஸ் ஏஜண்டுகள், சிறு வியாபாரிகள், ரிக்ஷா இழுப்பது போன்ற வேலைகள் செய்ய அனுமதி கோரி பஞ்சாப் சர்க்காரிடம் மகஜர் கொடுத்துள்ளனர்.

சர்க்கார் செக்ரடேரியட்டில் வேலை பார்க்கும் இவர்கள், தங்களுக்கு அளிக்கப்படும் சம்பளம் மிகவும் குறைவென்றும், ஆகவே தங்களுக்கு வேறு வேலைகள் செய்ய அனுமதி தேவை என்று சர்க்காரைக் கோரியுள்ளனர்.

(4-ம் பக்கம் பார்க்க)

## தொடர்ந்து கழகப் பணி புரிய.....

## நகரசபை உறுப்பினர் பதவியை ஈ. வெ. கி. சம்பத் துறந்தார்

"தி. மு. கழகப் பணி புரியும் துறையில், சுற்றுப்பிரயாணத்தில் அதிகம் ஈடுபட வேண்டியுள்ளதால், முனிசிபல் கூட்டங்களுக்குத் தவறாமல் செல்ல முடிவதில்லை; ஆகவே, 7—12—54 அன்று எனது முனிசிபல் கவுன்சிலர் பதவியை ராஜினாமா செய்துவிட்டேன்,"

—என்று, தி. மு. கழகச் செயற் குழு உறுப்பினரான தோழர் ஈ. வெ. கி. சம்பத் அறிவிக்கிறார்.

## அமெரிக்கப் படையில் ஆள் குறைப்பு

"வருகிற 1956-ம் ஆண்டு ஜுன் திங்களுக்குள் அமெரிக்க தரை, கடற்படைகளில் சுமார் $2\frac{1}{2}$ லட்சம் பேர் குறைக்கப்படுவர் என்றும், ஜப்பானிலிருக்கும் அமெரிக்கப் படைகளில் ஒரு பகுதி (டிவிஷன்) குறைக்கப்பட்டுவிடுமென்றும் அமெரிக்க பாதுகாப்பமைச்சர் கூறியிருக்கிறார்.

## இந்து - சீக்கியத் தகராறு

### டாக்டர் கட்ஜுவின் போதனை

"சீக்கியர் பிரிந்து போகிற அல்லது பிரிந்து போவதை விரும்புகிற நாள்தான், இந்தியச் சரித்திரத்திலேயே மிகவும் துக்கமான நாளாகும்."

"சிரோமணி குருத்துவார் பிரபந்தக் கமிட்டித் தேர்தலில் சீக்கிய மத இயக்கமான அகாலி தளத்தவரின் வெற்றி கண்டு பஞ்சாபில் உள்ள இந்துக்கள் அஞ்சத் தேவையில்லை."

இவ்வாறு, டாக்டர் கட்ஜு, ஜலந்தரில் இளைஞர் கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"சகோதரர்கள் போலுள்ள இந்துக்கள் — சீக்கியர்களிடையே ஏன் பிளவிருக்க வேண்டுமென்பது எனக்குப் புரியவில்லை; பஞ்சாபி மொழி பேசும் மாநிலம் அமைந்தால்கூட, இந்துக்கள் அங்கிருந்து என்றும் விரட்டப்பட மாட்டார்கள்; அங்கு எல்லா மக்களும் சுமூகமாகவே வாழவேண்டும்," என்றும் டாக்டர் கட்ஜு கூறியிருக்கிறார்.

## அங்கீகரிக்கமாட்டோம்!

"பார்மோசா தீவிலுள்ள சீன தேசிய நிர்வாகத்தை அங்கீகரிக்கின்ற உத்தேசம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குக் கிடையாது,"

என்று, பிரிட்டிஷ் வெளிநாட்டு விவகார அதிகாரி ஒருவர் தெரிவித்திருக்கிறார்.

## திரு-கொச்சி: இந்தியாவின் முதல் சோஷலிச நாடாம்!

## டிட்டோ அதைக்காண ம. சோ. க. விருப்பம்!

திருவனந்தபுரம், டிச. 20—

இந்தியாவின் 'சோஷலிஸ்டு இராஜ்யமான (?)' திருவாங்கூர் கொச்சியை மார்ஷல் டிட்டோ பார்வையிடும்படி செய்யாத மத்திய சர்க்காரின் போக்குபற்றி மக்கள் சோஷலிஸ்டு கட்சியின் தொண்டர்கள் மனவருத்தமுற்றிருக்கிறார்களாம்.

நேற்று அவர்கள் இது பற்றிக் கூடிப் பேசி, மார்ஷல் டிட்டோவின் நிகழ்ச்சிகளில் திருவனந்தபுரத்தைச் சேர்க்குமாறு மத்திய சர்க்காரை வற்புறுத்தினார்கள் என்று தெரிகிறது.

இக்கூட்டத்திற்கு விஸ்வம்பரன் தலைமை வகித்தார்.

"யூகோஸ்லேவியா மக்களின் மிகப் பெருந் தலைவருக்கு எங்களின் நல்வாழ்த்தும் வரவேற்பும். இந்தியாவில் உள்ள சோஷலிச இராஜ்யத்தின் தலைநகருக்கு அவரை வரவேற்க நாங்கள் ஆவலுடன் இருக்கிறோம்,"

என்ற தீர்மானம் நிறைவேறியது.

# பெங்களூர் மாநாடுகள் ஜன. 1, 2-ல்!

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 22—12—1954 புதன்


# பணிக்கரின் போதனை!

உத்கல் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் விரிவுரை ஆற்றிய சர்தார் பணிக்கர் அவர்கள், இந்தியத் துணைக்கண்டத்தில் உள்ளவர்கள், தங்கள் தங்கள் மாநிலப் பற்றை மறந்து, இந்தியப் பற்று அல்லது தேசிய உணர்வு கொள்ள வேண்டுமெனக் கூறியுள்ளார். அதுவுமன்றி, ஒரு குடிமகனுக்கும் ஒரு அரசாங்கத்திற்கும் எத்தகைய உறவு முறை இருக்க வேண்டும் என்பதற்கும் விளக்கம் கூறி இருக்கிறார்.

அவர் கூற்றின்படி இந்திய தேசியப் பற்று என்பதற்கும், மாநிலப் பற்று என்பதற்கும் அடிப்படையில் வேற்றுமை எதுவும் கிடையாது எனவும், இந்தியத் துணைக்கண்டத்தில் ஒரு தேசியப் பற்று ஏற்படுவதற்கு இடமில்லை எனவும், அதற்குப் பதிலாக பற்பல மாநிலப்பற்று ஏற்படுவதற்குத்தான் 'தேசிய வளமைகள்' உள்ளன எனவும், விளக்கமாகக் குறிப்பிட்டிருந்தோம். இந்த உண்மையை வலியுறுத்தும் வகையில், இந்திய தேசிய உணர்வை இரவல் பட்டுச் சேலைக்கு ஒப்பிட்டு, அது தேவை தேவை என அனவரதமும் அலறித் துடிக்கும் பணிக்கர் போன்றோரின் கூக்குரலை, அப்பட்டுச் சேலையின் சொந்தக்காரி, சேலையை அழுக்குப்படுவதிலிருந்து காப்பாற்ற சேலை கட்டினவள் பின்னல் தூக்கித்திரிந்த மணைக்கும் ஒப்பிட்டு நாம் முன்னர் எழுதியிருந்தோம். அதைத் தொடர்ந்து மேலும் இதை எழுதுகிறோம்.

"பாதுகாப்பிற்காகவும், செல்வச் செழுமைக்காகவும் வட்டார உயர்வு தாழ்வுகளையும், உள்ளகப் பாரம்பரியம்—மொழிகளையும் கொண்டுள்ள இந்தியா போன்ற ஒரு நாட்டில், ஒற்றுமையை உரம் பெறச் செய்யக்கூடிய திட்டங்களையும், கோட்பாடுகளையும் உற்சாகப்படுத்த வேண்டிய கட்டாயம் அதிகமாகிறது."

இவ்வாறு, பணிக்கர் குறிப்பிட்டுள்ளார்.

ஒற்றுமை என்ற சொல்லிற்கு பணிக்கர் கற்பித்துக் கொண்டிருக்கிற பொருள்படி, இந்தியாவில் அத்தகு ஒற்றுமை வேர்விட்டு வளர்வதற்கான நிலைமை அறவே இல்லை என்பது திட்டவட்டமாகத் தெரிகிறது. இருந்தாலும், இந்தியா முழுமைக்குமான பாதுகாப்பிற்காகவும், செல்வப் பெருக்கத்திற்காகவும், அவ்வொற்றுமையை வளர்த்து வலிவு பெறச் செய்யும் ஏற்பாடுகளையும் கோட்பாடுகளையும் வலியுறுத்த வேண்டுவது கட்டாயம் என அவர் போதிக்கிறார்.

அவருடைய நோக்கின்படி, அவ்வொற்றுமை, இந்தியாவின் பாதுகாப்பிற்கும், செல்வச் சிறப்புக்கும் தேவைப்படும் ஒன்றெனவே வைத்துக் கொண்ட போதிலும், அது நடைமுறையில் நிறைவேறக் கூடியதுதானா என்பதை ஆராய்ந்து பார்க்கும் உரிமையும், கடமையும் நம்மில் ஒவ்வொருவருக்கும் உண்டு என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அப்படி ஆராய்ந்து பார்க்குங்கால், கிடைக்கப் பெறும் முடிவு, பணிக்கரின் நோக்கத்தை நிறைவேற்றக் கூடியதாக இல்லை.

இந்தியத் துணைக்கண்டத்தில் உள்ளார் அனைவரிடத்திலும், இந்திய தேசிய உணர்வு வளர்ந்து உரம் பெற வேண்டியது, இந்தியாவின் பாதுகாப்பிற்கும் வளப்பெருக்கத்திற்கும் இன்றியமையாதது எனப் பணிக்கர் கூறினபோதிலும் கூட, அவர் விருப்பத்திற்கு மாறாகவே, இங்குள்ளார் நோக்கும் போக்கும் இருந்து வருகிறது என்ற உண்மையை ஒளிவு மறைவு இல்லாமல், அவரே உணர்ந்து விண்டும் உள்ளார்.

அதாவது, "வெல்லுவதற்கரிய பரம்பரை பெருமையையும், அரியபெரிய சாதனைகளையும் உடையவர்களாக, இந்தியாவின் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாக நாங்கள்தான் இருக்கிறோமெனக் கூறி, அதற்கு ஆதாரமாக நிச்சயமற்ற நமது முன்னாள் இந்திய வரலாற்றிலிருந்து அரசியல் அற்புதக் கற்பனைகளை சிருஷ்டிப்பதில், நம்மில் ஒவ்வொருவரும் உற்சாகம் காட்டுகின்றனர்."

இவ்வாறு பணிக்கர், இங்குள்ள மக்களிடம் காணப்பெறும் மனப்போக்கை, தாம் கண்டது கண்டபடி சித்தரித்துள்ளார்.

இம்மனப்போக்கு, இப்பரந்த இந்தியாவில், குறிப்பிட்ட ஒரு பகுதியினரிடை மட்டுந்தான் இருக்கிறது; மற்றப் பகுதியினர் சிறந்த இந்திய தேசிய மனப்பாங்குடன் தான் இருக்கின்றனர் என்று, ஏன் கொள்ளக் கூடாது என நம்மில் சிலர் முணுமுணுக்கவும் கூடும். அம்முணுமுணுப்புக்கும், அவர் இடம் கொடுக்கவில்லை. "இம்மனப்போக்கு, இந்தியா முழுமையும் இருக்கக் கண்டேன்" என்கிறார் பணிக்கர். இந்தப் பரவலான 'உண்மையை' காணும்பொழுது, அவர் நெஞ்சு எவ்வாறு இருந்தது என்று எண்ணுகிறீர்கள்? 'நெஞ்சு வலி'யுடன் இதைக் காண்பதாக, அவரே குறிப்பிட்டும் உள்ளார்.

'நம் வரலாறு, நம் நிலப்பரப்பு, நம் மூதாதையர், நம் இனம், நம் பெருமை, நம் வெற்றிகள், நம் கலை, நம் பண்பாடு,' என்பதில், இந்தியத் துணைக்கண்டத்தில் உள்ள பல்வேறு பகுதியினரும் பூரிப்படைகின்றனர்; அவ்வாறு கூறிக் கொள்வதில் இன்பம் காண்கின்றனர். இந்நிலையைக் காண்கிறார் பணிக்கர். சாதாரணமாகக் காணவில்லை; 'நெஞ்சு வலி'யுடன் அவர் காண்கிறார்.

இந்தியத் துணைக்கண்டத்தின் பல்வேறு பகுதியினரிடமும், இத்தகு மனப்போக்கு இருப்பது, பணிக்கர் கருதுவதுபோல் ஒருக்காலும் தவறுடையதாகாது. இம்மனப்போக்கு, பொது ஒற்றுமை உருவாவதைத் தடுக்கக்கூடியதுமல்ல. ஆனல் உலக வரலாறு கற்ற இந்திய வரலாற்று ஆசிரியரான பணிக்கரோ, இம்மனப்போக்கு இந்திய ஒற்றுமைக்கு ஊறு தேடும் என உரைக்கிறார் — நடுக்குறுகிறார்.

இன்றைய உலகில் பல்வேறு நாடுகள் உள்ளன. அவை ஒவ்வொன்றிற்கும் தனித்தனி 'தேசியப் பற்றுதல்' இருக்கத்தான் செய்கிறது. தனித்தனி 'தேசியப் பற்று' இருப்பது, உலக ஒற்றுமைக்கு ஊறு செய்வதாகும் என, தேசிய எல்லைக் கோடுகளை அழித்துவிடும் உள்ளமோ முனைப்போ ஒருவருக்கும் இருப்பதாகக் காணோம். உலகம் ஒன்று எனும் கோட்பாடு தங்களுடையது எனக் கூறிக்கொள்ளும் வல்லரசுகளின் முயற்சியுங்கூட இத்துறையில், இப்பொழுது செல்வதாக இல்லை.

இந்திய தேசியப் பற்றை உருவாக்கி உரமாக்க முயற்சிக்கும் பணிக்கரும் கூட, இக்காலக் கட்டத்தில், இந்த ஒரே உலகக் கோட்பாட்டிற்கு உடன்படுவார் எனக் கொள்ள முடியாது. அவர் ஒப்புக் கொள்வதாக இருந்தாலுங்கூட, ஒரே உலகக் கோட்பாட்டின் வழி ஒழுக, இன்று எந்த ஒரு நாட்டு மக்களும் தயாராக இல்லை என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. நிற்க,

இங்குள்ளார் அனைவருக்கும் இன்றியமையாதத் தேவையாக வேண்டப்படுவது, 'இந்திய தேசியம்' எனப் பணிக்கர் கூறிடும் கூற்றிலும், உலகக் கண் கொண்டு நோக்குமிடத்து, போதிய நியாயம் இல்லை என்பது விளக்கமுறும். எனவே, இந்திய தேசியப் பற்று இங்குள்ளாரிடம் வேர்விட்டு வலிவு பெறுவதற்கு இன்றியமையாதத் தேவைகளாகக் கட்டாயம் இருந்து தீர வேண்டிய தேசிய வளமைகள் இந்தியத் துணைக்கண்டத்தில் அறவே இல்லை என்பதையும், அதற்கு மாறாக இந்தியத் துணைக்கண்டத்தில் இருப்பது எல்லாம் சிறிய சிறிய வட்டார தேசியப் பற்று கால்கொண்டு வளருவதற்குத்தான் வாய்ப்பும் வசதியும் இருக்கிறது என்பதையும் பணிக்கர் உணர்ந்துகொள்வது அறிவுடைமையாகும். இவ்வுண்மையை பணிக்கர் உணர்ந்தே இருக்கிறார். இருந்தாலும், 'பெரியது' என்பதில் அவருக்குள்ள மோகம், மேல் நாட்டிலிருந்து இரவல் வாங்கிய 'இந்திய தேசியப் பற்று' எனும் விலை போகா பண்டத்தை விலை கூறி விற்கத் தூண்டுகிறது. அதற்கு நாம் என்ன செய்வது?

## தீப்பெட்டித் தொழிலுக்குக் குருடர்கள்!

தீப்பெட்டித் தொழிலில் குருடர்கள் சுலபமாக வேலை செய்ய முடியும் எனவும், எனவே அவர்களில் பெரும் பகுதியினரை மேற்படி தொழிலில் நியமித்துக் கொள்ளுமாறும், சிவகாசி தீப்பெட்டித் தொழில் வியாபார சங்கத்தின் சார்பில் தரப்பட்ட வரவேற்பின்போது வருமான வரி கமிஷனர் முகர்ஜி வேண்டிக் கொண்டார்.

# 'ஏழைகளின் விடுதி சோம்பேறிகளின் மடமாகக் கூடாது!'

## 'ஏழைக் குழந்தைகள் உயர்வுக்கு நாடு பூராவும் திட்டம் வேண்டும்!'

சேலத்தில் நீதிபதி இராமசாமி கவுண்டர் சொற்பொழிவு

"ஏழைகளுக்கென்று நடத்தப்படும் விடுதிகள் சரிவரப் பயன் அளிப்பதில்லை; நல்ல உடல் அமைப்புள்ள பலர் சர்க்காரின் பணத்தைப் பாழாக்கிக்கொண்டு, காலத்தை வீணே இந்த விடுதிகளில் செலவிடுகின்றனர்,"

என்று, சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி இராமசாமி கவுண்டர் சேலத்தில் நிகழ்ச்சி ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டார்.

"நோயுற்ற பிச்சைக்காரர்களால் நோயைப் பரப்பத்தான் இயலுமேயன்றி அவர்கள் வேலை செய்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது,"

உடல் வலிவுள்ள பிச்சைக்காரர்கள் பலர் இந்த விடுதிகளில் [illegible] வீணாக்குவதைக் கண்டு [illegible] திடுக்கிட்டதாக அவர் கூறி[illegible].

[illegible]ன் பார்த்த பலரில், ஒருவர், [illegible] பெற்ற ஸ்டேஷன்மாஸ்டர் என்றும், இவர் பெரிய குடும்பஸ்தர் என்றும், சிறிதளவு 'பென்ஷன்' கிடைத்துங்கூட, அவர் ஏழைகள் விடுதியில் நீண்ட நாள் இருக்க விரும்பினர் என்றும் நீதிபதி குறிப்பிட்டார்.

இதுபோன்ற பல விடுதிகள் சோம்பேறிகளுக்கு உதவக் கூடாது; இவர்களை ஏதாவது வேலை செய்யுமாறு செய்ய வேண்டும்."

என்று அவர் மேலும் குறிப்பிட்டார்.

குழந்தைகள் பற்றிய பிரச்சினை உலகில் உள்ள எல்லாத் தலைவர்களின் முன்னுள்ள பிரச்சினை என்று அவர் குறிப்பிட்டார்.

நிர்வாணமாகவும், பட்டினியுடனும், போதுமான வளர்ச்சியின்றியும் ஏராளமான குழந்தைகள் தமிழ் நாடு முழுமையும் நின்று கொண்டிருக்கும் சோகக் காட்சியை, தான் கண்டிருப்பதாக நீதிபதி குறிப்பிட்டார்.

நகரங்களில் மட்டும் குழந்தைகள் பிரச்சினையைக் கவனிப்பதில் பயன் இல்லை என்றும், இதுபற்றி சிறந்த அளவில் நாடு முழுமைக்கும் திட்டமிடப்பட வேண்டும் என்று அவர் மேலும் கூறினர்.

# பாகிஸ்தானுக்கு இடைக்கால அரசியல் திட்டம்

## தீட்டும் பொறுப்பில் சுகரவர்த்தி!

பாகிஸ்தானின் சட்ட அமைச்சராக நியமிக்கப்பட்டிருக்கிற அவாமிலீக் தலைவர் சுகரவர்த்தியிடம், கிழக்கு—மேற்கு என இரு உறுப்புகளைக் கொண்டதாக மட்டுமே உள்ள பாகிஸ்தான் முழுமைக்கும் இடைக்கால அரசியல் திட்டம் ஒன்றைத் தீட்டும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருப்பதாக நம்பிக்கையாகத் தெரிய வருகிறது.

கிழக்கு—மேற்கு ஆகிய இரு உறுப்புகளும் சமபங்கு பெற்று இயங்கும் முறையில், ஒரு மத்திய கூட்டாட்சியிடம் ஒப்படைக்கப்படும் முக்கிய அதிகாரங்கள் நீங்கலாக, மற்ற அதிகாரங்கள் அனைத்தையும் உறுப்புகளுக்கு இருக்கும் வகையில் இடைக்கால ஏற்பாடு இருக்கும் எனவும் கூறப்படுகிறது இரு உறுப்புகளும் ஏற்றுக் கொள்ளும் வகையில் ஒரு சமரச முறையை வகுப்பதுதான் முக்கியமானது எனக் கருதப்படுகிறது. ஏனெனில் அதனடிப்படையில் பொதுத் தேர்தல் நடைபெற வேண்டி இருப்பதினலேயே அதற்கு அவ்வளவு முக்கியத்துவம் கூறப்படுகிறது.

இடைக்கால திட்டம் தீட்டப்பட்டுவிட்டதும், பாக். கவர்னர்-ஜெனரல், இப்பொழுது நடைமுறையில் இருந்துவரும் 1935-ம் ஆண்டு இந்திய அரசாங்க சட்டத்தை விலக்கிவிட்டு; தனக்குள்ள விசேஷ அதிகாரத்தைக் கொண்டு இடைக்கால ஏற்பாட்டை நடைமுறைக்குக் கொண்டு வருவார் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

## 'இந்தியன் லிசனர்'

கோவாவில் தடுக்கப்பட்டது!

இந்தியப் பேரரசால் வாரவெளியீடாக வெளியிடப்பட்டு வரும் அகில இந்திய வானொலி நிலையச் செய்திகளைக் கொண்ட 'இந்தியன் லிசனர்' கோவா பிரதேசத்திற்குள் வரக்கூடாது என, அந்த சர்க்காரால் தடுக்கப்பட்டிருக்கிறது.

அதுவுமன்றி, அகில இந்திய வானொலிப் பரப்பை கேட்கக் கூடாது எனத் தடை விதித்திருப்பதோடு, தடையை மீறி அதைக் கேட்பவர்களை, சென்ற ஒரு வார காலமாக கோவா சர்க்கார் கைது செய்தும் வருகிறது என நம்பப் படுகிறது.

## சூடான் மந்திரி சபையில் பிளவு

சூடான் மந்திரி சபையில் மிக விபரீதமானதொரு பிளவு தோன்றியிருப்பதாக பிரதம மந்திரி இஸ்மாயில் எல். அஜூரி தகவல் வெளியிட்டுள்ளார் எனத் தெரிகிறது.

மந்திரிகள் சிலர், மக்கள் சபையின் எதிர்க் கட்சியான உம்மா (சுதந்திர அனுதாபக் கட்சி) என்ற கட்சியின் உறுப்பினர்களுடைய ஆதரவைக் கொண்டு தம்மை மிரட்டுவதாகவும்; வேறு சில மந்திரிகளை பதவியிலிருந்து நீக்காவிட்டால் தாங்கள் எதிர்க் கட்சியுடன் சேர்ந்துவிடுவதாகக் கூறுவதாயும் பிரதமர் கூறியிருக்கிறாராம்.

பிரிட்டிஷ் சிவில் அதிகாரிகளை நீக்கிவிட்டு அந்த இடங்களில் சூடானியரை நியமிக்கிற சூடானிய மயமாக்கும் வேலை முடிவுறுமலிருப்பதினல் தான், பிரிட்டனிலிருந்து சமீபத்தில் நான் இங்கு திரும்பியபோது கொந்தளித்துக் கொண்டிருந்த புரட்சியை அடக்குவதற்கு நடவடிக்கை எடுக்காதிருந்தேன் என்றும் பிரதமர் அஜூரி குறிப்பிட்டிருக்கிறார்.

"ஜனவரி முதல் தேதிக்குள் சூடானியர் மயமாக்கும் திட்டம் நிறைவேறிவிட வேண்டுமென கடந்த டிசம்பர் 12-ந் தேதி நடைபெற்ற மந்திரி சபைக் கூட்டத்தில் கூறினேன். ஆனல் மந்திரி சபையில் பிளவு தோன்றுவதற்கான காரணம் எதுவும் தெரியவில்லை; மேலும், எனது சர்க்காரைக் காப்பாற்ற நான் என்ன நடவடிக்கை மேற்கொள்வதென்பதும் எனக்குத் தெரியவில்லை," என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.



# "ஜாதி முறை நாட்டைப் பின்னேக்கி இழுத்தது!"

## "தீண்டாமை ஒழியும்வரை சீர்திருத்தப் பிரச்சாரம் தேவை!"

நாராயண குருவின் சேவை: ஜெகஜீவன்ராம் பாராட்டு

புதுடில்லி, டிச. 20—

"நம்மிடையேயுள்ள ஜாதி குறைகள் இந்து சமுதாயத்திற்கு மட்டுமன்றி, நாடு முழுமைக்குமே பெருவாரியாக தீங்கிழைத்துள்ளது. நாட்டின் முன்னேற்றத்தை அது பின்னுக்குத் தள்ளிவிட்டது; மற்ற மதங்களையும் ஜாதிமுறை களங்கப்படுத்திவிட்டது,"

—என்று, இந்திய சர்க்காரின் செய்திப் போக்குவரத்து இலாகா அமைச்சர் ஜெகஜீவன் ராம் கூறினர்.

கேரளத்தின் சமூகப் புரட்சிக்கு வித்தூன்றிய நாராயண குருவின் 100-வது பிறந்த நாள் விழாவை ஆரம்பித்துவைத்துப் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினர்.

"நாட்டிலே தீண்டாமை நோய் நிலவும்வரை, ஒரே கடவுள், ஒரே மதம், ஒரே ஜாதி என்று பிரச்சாரம் செய்த நாராயண குரு போன்ற சீர்திருத்தவாதிகளின் கருத்தை மக்களிடையே பரப்புவது அவசியமாகும்,"

என்று, அவர் மேலும் கூறினர்.

சங்கராச்சாரியாருக்குப் பின்னர், நாராயண குரு திரு-கொச்சி மக்களின் ஆத்மிகத் தலைவராக விளங்கினர் என்றும், தன் வாழ்நாள் முழுமையும், மதம் என்பது தனி மனிதனின் பிரச்சினை என்று கூறும் ஜாதி பேதமற்ற, வகுப்பு பேதமற்ற சமுதாயத்தை அமைக்க செலவிட்டார் என்று ஜெகஜீவன் ராம் மேலும் குறிப்பிட்டார்.

இந்த விழாவில் இந்திய சர்க்காரின் அமைச்சர்கள் பாராளுமன்ற உறுப்பினர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர். டாக்டர் இராதா கிருஷ்ணன் தலைமை வகித்தார்.

ஐந்தாண்டுத் திட்டத்தின்முதல் மூன்று ஆண்டு காலத்தில், சித்தரஞ்சன் இரயில் எஞ்சின் உற்பத்தி சாலையில் 114 இரயில் எஞ்சின்கள் உற்பத்தி செய்யப்பட்டன.

## இதாவது செய்கிறர்களே!

புதுடில்லி, டிச. 20—

யாத்திரீகர்கள் கண்டு களிக்கக் கூடிய இந்தியாவெங்கிலுமுள்ள முக்கிய பிரதேசங்களை அபிவிருத்தி செய்ய ரூ. 4 கோடி செலவில் குறுகிய காலத் திட்டமொன்று வகுக்கப்பட்டுள்ளதாம்.

இத்திட்டத்தின்படி மதுரை, இராமேஸ்வரம், காஞ்சீபுரம், மகாபலிபுரம் ஆகிய இடங்கள் சென்னை மாநிலத்தில் அபிவிருத்தி செய்யப் படுமாம். மற்றும் அஜந்தா, எல்லோரா குகைகளும், திரு—கொச்சியில் பெரியாறு, வனவிலங்கு சாலை, ஹம்பி, ஜோக் நீர்வீழ்ச்சி முதலிய இடங்களும் இந்த அபிவிருத்தித் திட்டத்தில் இடம் பெற்றுள்ளனவாம்.

## மாணவர் மன்ற படிப்பகத் திறப்பு விழா

வடுகப்பட்டி, டிச. 19—

15—12—54 காலை 10 மணியளவில் திரு. என். சீதாராம் தலைமையில் நடைபெற்ற திறப்புவிழாவில், திரு. எஸ் காமாட்சி படிப்பகத்தைத் திறந்துவைத்து சொற்பொழிவாற்றினர். பின்னர், தோழர்கள் என். இராசகோபால், ஆர். கோவிந்தசாமி ஆகியோர் பேசியதும் காலை நிகழ்ச்சி முடிவுற்றது. பின்னர் மாலை 4 மணிக்கு திரு. பி. கோவிந்தராசுலு தலைமையில் திரு. சௌந்தரம் ராமச்சந்திரன் எம். எல். ஏ., வானொலி நிலையத்தையும், திரு. பத்மனபன் புத்தக அறையையும் திறந்துவைத்துப் பேசினர். மற்றும் பல தோழர்கள் பேசினர்.

16—12—54 காலை 8½ மணியளவில் திரு. டபள்யூ. ஆர். எஸ். சத்தியநாதன் அவர்களுடன் ஜில்லா கலெக்டர் ஆர். குஞ்சிதபாதம், திரு. சௌ. இராமச்சந்திரன் எம். எல். ஏ., ஆகியோரும் படிப்பகத்தைப் பார்வையிட்டு கிராம மக்களைப் பாராட்டினர். அன்று மாலை 4 மணிக்கு தோழர் என். சீதாராமன் தலைமையில் நடைபெற்ற கிராம மக்களின் பொதுக் கூட்டமொன்றில் படிப்பக நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—

தலைவர்: பி. கோவிந்தராசுலு; செயலாளர்: யு. ஆர். கன்னையா; படிப்பக நிர்வாகி: அழகிரிசாமி.

## தோல்விக்குப் பிறகு வெற்றி

இந்தோ—சீன வரவு—செலவுப் பிரச்சினையில், பிரான்ஸ் தேசிய சட்டசபை, பிரதமர் மெண்டே பிரான்சுக்கு எதிராக ஓட்டளித்து சர்க்காரைத் தோற்கடித்தது நினைவிருக்கலாம். அதை ஒட்டி, சட்டசபை தன் மீது நம்பிக்கை தெரிவிக்குமாறு பிரதமர் பிரான்ஸ் கோரியபோது, பெருவாரியான வாக்குகளால் மெண்டே பிரான்ஸ் வெற்றி பெற்றிருக்கிறார் எனத் தெரிகிறது.

## தந்தி அலுவலகங்கள்

புதுடில்லி, டிச. 20—

ஐந்து மைல் எல்லைக்குள் தந்தி அலுவலகங்கள் இல்லாததும், 5000-த்திற்கு மேற்பட்ட மக்கள் தொகை கொண்டதுமான நகரங்களுக்கு தந்தி அலுவலகங்களை நிறுவ உத்தேசிக்கப்பட்டுள்ளதாக மக்கள் சபையில் செய்திப் போக்குவரத்து உதவி மந்திரி தெரிவித்திருக்கிறார்.

அத்தகைய அலுவலகங்களை நிர்வகிப்பதால் ஏற்படும் வருடாந்திர நஷ்டம் ரூ. 500-க்கு மேல் இருத்தலாகாதெனவும் அவர் கூறியிருக்கிறார்.

# ஆப்பிரிக்காவை இந்தியர் மயமாக்க முயற்சியாம்!

## வெள்ளை மந்திரியின் கூற்று

ஜோகனஸ்பர்க், டிச. 20—

"இந்தியா, தனது பெருகிவரும் மக்கள் தொகையை ஆப்பிரிக்காவில் இடம்பெறச் செய்ய முயற்சித்து வருகிறது; இந்த நிலை மிக ஆபத்தானது; ஏனெனில், ஏற்கனவே வெள்ளையரல்லாத 20 கோடி பேர், வெள்ளையருடன் சமஉரிமை கோரிப் போராடிக் கொண்டிருக்கின்றனர்,"

—என்று, ஜான் டிக்ளெர்க் என்ற புதிய தொழிலாளர் மந்திரி கூட்டமொன்றில் குறிப்பிட்டிருக்கிறார்.

டாக்டர் ஜி. டி. ஷோல்ட்ஜ் என்பவர் பேசுகையில், கூறியதாவது:— "ஆப்பிரிக்கப் பிரச்சினை தீர ஒரு வழி உண்டு; இனப் பாகுபாடு, பிரதேச வாரியாக நடத்தப்பட வேண்டும்; அதாவது, 'வெள்ளையர் வாழும் பகுதி, வெள்ளையரல்லாதார் வாழும் பகுதி' என்று ஆப்பிரிக்காவைப் பிரிக்க வேண்டும்; இதனால் வெள்ளையர் வாழும் பகுதியில் எல்லா வேலைகளையும், தொழில்களையும் வெள்ளையர்களே செய்து கொள்ள வேண்டிவரும்; வெள்ளையருக்கு வேலைசெய்ய நீக்ரோ அடிமைகள் இருக்கமாட்டார்கள். இதை விடுத்து, வெள்ளையரும் — வெள்ளையரல்லாதாரும் ஒன்ருக வாழ்வரேயானல், வெள்ளையரைப் போலவே அவர்களும் சமஉரிமை பெற்றலன்றி, வெள்ளையரை எதிர்த்துப் போராடாமலிருக்க மாட்டார்கள்."

ஜான் டிக்ளெர்க் மேலும் பேசுகையில் சொன்னர்:—

"பண்டித நேருவும், திருமதி விஜயலட்சுமி அம்மையாரும் பேசும்போதெல்லாம், வெள்ளையர் இனத்தை எதிர்த்து, மஞ்சள்—கறுப்பு இனமக்கள் போராடுகிற ஒரு மூன்ருவது உலக யுத்தத்தைப் பற்றிப் பேசத் தவறுவதேயில்லை," என்ருர்.

# ஆந்திர எஞ்சினீயரிங் கல்லூரி தமிழ் மாணவர்கள்

## சலுகைகள் நிறுத்தம்பற்றி சென்னை சர்க்காரின் எச்சரிக்கை

ஆந்திர மாநிலத்தில் உள்ள அனந்தப்பூரிலிருக்கும் எஞ்சினீயரிங் கல்லூரியில் பயிலும் சென்னை மாநிலத்தைச் சேர்ந்த 34 தமிழ் மாணவர்களுக்குத் தரப்பட்டுவந்த அரைச்சம்பளம் போன்ற சலுகைகள்தொடர்ந்து தரப்படாவிட்டால் சென்னை மாநிலத்தில் படிக்கும் ஆந்திர மாணவர்களுக்குத் தரப்படும் கல்விச் சலுகைகளை சென்னை அரசாங்கம் நிறுத்திவிடும் என்று மராமத்திலாக்கா மந்திரி இராமநாதபுரம் ராஜா தெரிவித்திருக்கிறார். நிலைமையைச் சமாளிக்க இவ்வித நடவடிக்கைகள் அவசியமானது, நேர்மையானது என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

அனந்தப்பூரில் உள்ள 34 மாணவர்கள் சென்னை சர்க்காருக்கு முறையிட்டுள்ளதாயும் அவர்கள் தங்களை சென்னை அல்லது கோவையிலுள்ள கல்லூரிக்கு மாற்றிவிடக் கோரியுள்ளதாயும் அவர் கூறினர்.

"இதுபற்றி சர்க்கார் தீவிரமாக கவனித்து வருகின்றனர். இவ்விஷயமாக இறுதி முடிவு செய்யப்படும் வரையில் தமிழ் மாணவர்களுக்குத் தொடர்ந்து சலுகைகளை வழங்கி வருமாறு ஆந்திர சர்க்காரைக் கேட்டுக்கொண்டுள்ளோம்" என்றும் மராமத்து மந்திரி தெரிவித்திருக்கிறார்.

"நிலை மாறுவிட்டால், சென்னை கல்லூரிகளில் உள்ள ஆந்திர மாணவர்களுக்கு அளிக்கப்படும் சலுகைகளை ரத்து செய்யுமாறு நேரிடுமென சர்க்கார் ஆந்திர சர்க்காருக்கு அறிவிக்குமா?" என்று சுயம்பிரகாசம் கேட்டார்.

"இயற்கையாக அப்படித்தான் நடக்கவேண்டி வரும்," என்று அமைச்சர் பதில் தந்தார்.

### பீடித் தொழிலாளருக்கு நிவாரணம்?

பீடி, சுருட்டுத் தொழிலாளருக்கு, குறைக்கப்பட்ட கூலியை உயர்த்தித்தரவேண்டுமென்று சென்னை சட்ட சபையில் உறுப்பினர்கள் பலர் விவாதத்தின் போது வற்புறுத்தினர்.

விவாதத்திற்குப் பதிலளிக்கும் முறையில் அமைச்சர் பக்தவத்சலம், கூலி நிர்ணயம் இன்னும் இறுதியான ஒரு முடிவுக்கு வரவில்லை என்றும், தற்போது வெளியாகியுள்ள அறிவிப்பு பூர்வாங்கமானதே என்றும், அவ்வறிவிப்பின் பேரில் வருகின்ற யோசனைகளையும், ஆட்சேபணைகளையும் சர்க்கார் கவனித்து முடிவு செய்யுமென்றும் கூறினர்.

### சலுகை காட்டுகிறது!

"நகரிலுள்ள ஒவ்வொரு யூனிட்டிலும் குறைந்த அளவு 10 பஸ்களாவது ஓடவேண்டும்; ஏற்கனவே உள்ள சிறு யூனிட்டுகளை தாமாகவே இணைக்க பஸ் சொந்தக்காரர்கட்கு ஊக்கமளிப்பதோடு, குறைந்தது 10 பஸ்கள் வைத்திருப்போருக்கே புது 'பர்மிட்'டுகள் வழங்குவதில் சலுகை காட்ட வேண்டும்," என்று பஸ் போக்குவரத்து சம்பந்தமாக நியமிக்கப்பட்ட ஆலோசனைக் குழுவின் சிபாரிசுகளை சர்க்கார் ஏற்றுக்கொண்டு உத்திரவு பிறப்பித்துள்ளதாகவும், ஆரம்பகாலத்திலேயே 10 பஸ்கள் வைத்துக் கொண்டு போக்குவரத்து நடத்த முன் வருவோருக்குப் புது 'பர்மிட்'டுகள் வழங்குவது பற்றி சர்க்கார் பரிசீலிக்கும் என்றும் கேள்விகட்குப் பதிலளிக்கையில் போக்குவரத்து அமைச்சர் பரமேஸ்வரன் கூறினர்.

மேலும், பஸ்-லாரி சொந்தக்காரர்களின் குறைகளை விசாரிக்கக் குழு ஒன்றை நியமிக்கும் யோசனை சர்க்காருக்குக் கிடையாது என்றும் குறிப்பிட்டார்.

### விபத்துகள்

சென்னை மாநிலத்தில் 1953—54-ல் பெரிய (டிரங்க்) சாலைகளில் வாகனப் போக்குவரத்துக்களால் 709 விபத்துக்கள் ஏற்பட்டதாயும், அவற்றுள் 85 பேர் கொல்லப்பட்டதாகவும், இறந்து போனவர்களின் குடும்பங்கட்கு அரசாங்கம் உதவி ஏதும் தரவில்லை என்றும் கேள்வி ஒன்றுக்கு விடையிறுக்கையில் அமைச்சர் பரமேஸ்வரன் தெரிவித்தார்.

### திட்டக் குழுவின் பரிசீலனையில்.........

புதிய அரிசி மில்களுக்கு 'லைசென்ஸ்' வழங்குவதற்கோ, ஏற்கனவே இருக்கும் மில்களை விரிவாக்கவோ இப்போது தடையேதும் கிடையாதென்றும், கைக்குத்தல் அரிசியை ஆதரிப்பதற்காக, இந்த மில்களுக்கு 'லைசென்ஸ்' மறுக்கப்படலாமா என்பது திட்டக் கமிஷனின் பரிசீலனையிலிருக்கிறது எனவும் கேள்வி ஒன்றுக்குப் பதிலாக நிதியமைச்சர் தெரிவித்திருக்கிறார்.

### இன்னும் உருவாகவில்லை!

சென்னை மாநிலத்தில், கடலூர் தாலூகா கோண்டூரில் ஒரு குழாய் கிணறு வெட்டப்பட்டதாகவும், அந்த ஒரு கிணறு மட்டும் வெட்ட ரூ 27,000 செலவாயிற்றென்றும் அமைச்சர் பக்தவத்சலம் தெரிவித்துள்ளார்.

இதுபோன்ற 120 குழாய் கிணறுகளை வெட்ட சர்க்கார் யோசித்ததாகவும், இந்திய சர்க்காரிடமிருந்து எதிர்பார்க்கப்பட்ட 50 சத விகித மானியத் தொகை, கூட்டுறவு முறையில் ஏற்பாடு செய்து கொள்ளப்படலாமென்ற இந்திய சர்க்காரின் யோசனையில், இதற்கு 12½ சத விகித உதவியே கிடைப்பதால் அது சாத்தியமற்றதாகிவிட்டதெனக் கருதப்பட்டதென்றும் அவர் மேலும் கூறினர்.

இதர இடங்களுக்கும் இம்மாதிரி குழாய்க் கிணறுகள் கட்டும் விஷயம் சர்க்கார் பரிசீலனையிலிருப்பதாயும், என்றாலும் திட்டம் இன்னும் இறுதியாக உருவாகவில்லையென்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

சுமார் 100 இலட்சம் தொழிலாளர்களுக்கு கைத்தறி தொழில் வேலையளித்து வருகிறது.

# 2-வது ஐந்தாண்டு திட்டத்தின் மகிமை?

## 10 ஆண்டுகளில் நிலைமை மாறுமாம்

## 120 லட்சம் பேருக்கு வேலை கிடைக்குமாம்

புதுடில்லி, டிச. 20—

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடையும் போது 120 லட்சம் பேருக்கு வேலை கிடைத்திருக்கும்," என்று இந்திய நிதி அமைச்சர் தேஷ்முக், மக்கள் சபையில் பொருளாதாரக் கொள்கை விவாதத்தை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் கூறினர்.

"இதன்படி ஆண்டு ஒன்றுக்கு ஆயிரம் கோடி ரூபாய்கள் முதலீடு செய்யப்படும்," என்ருர்.

ஐந்து ஆண்டுகளிலும் சுமார் ரூ. 5000 கோடி முதல், ரூ. 6000 கோடிவரை முதலீடு செய்யப்படுமென்றும், இவற்றில் சுமார் ரூ. 3,500 கோடி பொது, தனிப்பட்ட மூலதனமாக இருக்குமென்றும் அவர் குறிப்பிட்டார்.

வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க மொத்தமாக 240 லட்சம் புதிய வேலைகள் உருவாக்கப்பட வேண்டும் என்ருர்.

நிதிமந்திரி தேஷ்முக் பேச்சைக் கேட்க ஏராளமான மக்கள் காலரியில் கூடியிருந்தனர்.

"பத்து ஆண்டுகளுக்குள் எல்லோருக்கும் வேலை கிடைக்குமாறு செய்வதே இந்திய சர்க்காரின் நோக்கம்.

"இது, பேராசையல்லவென்றும், மிகக் குறைந்த அளவுள்ள விருப்பமேயாகும்; இதையாவது நாம் செய்தாக வேண்டும்.

"சர்க்காரின் இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதில் பொது, தனிப்பட்ட நிலையங்கள் நல்ல முறையில் அபிவிருத்தி அடைய சந்தர்ப்பங்கள் உண்டு," என்றும் தேஷ்முக் மேலும் குறிப்பிட்டார்.

## ஆந்திரத் தேர்தல்கள்

பிப்ரவரி 11-ல் துவக்கம்

கர்னூல், டிச. 20—

1955-ம் ஆண்டு மார்ச் திங்கள் 15-ந் தேதிக்குள் ஆந்திர சட்டசபைக்கான தேர்தல்கள் நடந்து முடிய வேண்டுமென்று ஆந்திர கவர்னர் வெளியிட்டுள்ள உத்தரவு ஒன்று சர்க்காரின் தனி கெஜட் ஒன்றில் காணப்படுகிறது.

காலை 7 மணி முதல் 12 மணி; மாலை 1 மணி முதல் 5 மணி வரை வாக்குப் பதிவுகள் நடைபெறும் என்று தெரிகிறது.

அபேட்சா பத்திரங்களைத் தாக்கல் செய்வதற்கு ஜனவரி 3-ந் தேதி கடைசி நாள்; அபேட்சா பத்திரங்களின் பரிசீலனை ஜனவரி 7; திரும்பப் பெறும் கடைசிநாள் ஜனவரி 10.

பிப்ரவரி திங்கள் 11-ம் நாள் 35 தொகுதிகளிலும், 15-ம் நாள் 35 தொகுதிகளிலும், 18-ம் நாள் 83 தொகுதிகளிலும், 23-ம் நாள் 34 தொகுதிகளிலும், 27-ம் நாள் 30 தொகுதிகளிலும் தேர்தல்கள் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது

# நாடகத் தடை மசோதா சட்டமாகிறது

## எதிர்க் கட்சியினர் சபையை விட்டு வெளியேறினர்

## நேர்மையான திருத்தங்களும் தோற்றன

## நிதி மந்திரியின் சப்பைக்கட்டு!

சென்னை, டிச. 22—

சென்னை நாடகத் தடை மசோதா பற்றிய விவாதம் சட்டசபையில் நடைபெற்றது. மசோதாவை சட்டமாக்குவதில் நிதி மந்திரி சுப்பிரமணியம் அளவற்ற அவசரமும் அக்கரையும் காட்டியிருக்கிறார்.

மசோதாவை ஒரு வருட காலத்திற்குப் பின் ஆலோசிக்க வேண்டும் என்று எதிர்க்கட்சியினர் கொண்டுவந்த திருத்தம் தோல்வியுற்றிருக்கிறது. வாக்கெடுப்பின்போது மசோதாவை ஆதரித்து 107 வாக்குகளும் எதிர்த்து 48 வாக்குகளும் பதிவாகியிருக்கின்றன.

மசோதாவை காங்கிரஸ், முஸ்லீம் லீக், சில சுயேச்சையாளர்கள் ஆகியோர் ஆதரித்தும், திராவிட பார்லிமெண்டரி கட்சி, கம்யூனிஸ்டு கட்சி ஆகியோர் எதிர்த்தும் வாக்களித்திருக்கின்றனர்.

நேற்று முன்தினம் எதிர்க்கட்சியினர் எழுப்பிய ஆட்சேபங்களுக்குப் பதிலளிக்கும் சந்தர்ப்பத்தை, நிதி மந்திரி சுப்பிரமணியம், தான் நினைத்ததையெல்லாம் பேசுவதற்கு வாய்ப்பாக்கிக்கொண்டிருக்கிறார்.

தான் கோண்டுவந்துள்ள நாடகத் தடை மசோதாவிற்கு எழுந்துள்ள எதிர்ப்பெல்லாம் அரசியல் ரீதியான எதிர்ப்புத்தானென்றும் மற்றபடி, இந்திய அரசியல் சட்டத்திற்கு மதிப்பளிக்கவும் பலாத்காரத்தை வெறுக்கவும் செய்கிறவர்கள் மசோதாவை எதிர்ப்பதற்கோன்றுமில்லை என்றும் தனக்குத்தானே சமாதானம் செய்துகோண்டுள்ளார்.

மசோதாவிற்குத் தாங்கள் கோண்டுவந்த சிறு சிறு திருத்தங்கள்கூட சர்க்காரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்றும், அதனால் சர்க்காரே மசோதாவைச் சட்டமாக்குவதற்கு முழுப் பொறுப்பையும் ஏற்க வேண்டுமெனவும் எடுத்துக்காட்டி, திராவிட பார்லிமெண்டரி கட்சி, கம்யூனிஸ்டு கட்சி ஆகியவர்கள் வெளியேறினர்.

"ஒரு நாடகம் ஆட்சேபனைக்குரியதா என்பதைக் கண்டறிவதில், நாடகத் துறையில் உள்ளோரின் ஆலோசனை கோரப்படும்," என்று மசோதாவைச் சட்டமாக்கிவிட்ட மந்திரியார் கூறியிருக்கிறார்.

கம்யூனிஸ்டுகள் மசோதாவை எதிர்ப்பதற்குக் காரணம் என்ன என்பதை, தான் விவாதத்திலிருந்து புரிந்துகொண்டதாகக் கூறிவிட்டு, மந்திரி சுப்பிரமணியம் மேலும் பேசுகையில், மசோதாவை எதிர்க்கும் இன்னொருசாரார் திராவிடக் கட்சியினர் என்றும், அவர்கள் எதிர்ப்பதற்குக் காரணம், அவர்கள் செய்து வருகிற 'திராவிட நாடு திராவிடருக்கே' எனும் பிரச்சாரம் இந்தச் சட்டத்தால் தடைபடுமோவென அவர்கள் அஞ்சுவதுதான் என்றும் கூறியிருக்கிறார்.

'மசோதாவிற்கு காட்டப்படும் எதிர்ப்பு, கொள்கை சம்பந்தப்பட்டது; திராவிட நாடு—அதாவது தென்னிந்தியா, இந்தியாவின் இதர பகுதிகளிலிருந்து பிரிந்து தனி நாடாக வேண்டுமென்றும், அங்கு திராவிடர்கள் மட்டுமே வாழவேண்டுமென்றும், திராவிடரல்லாதார் வெளியேற்றப்பட வேண்டுமென்றும் கருதுபவர்கள் திராவிடக் கட்சியினர்; அவர்களின் இந்தக் கொள்கைக்கு எதிரான எந்தச் சட்டத்தையும் எதிர்க்கத்தான் செய்வர்,"

என்று, மந்திரி சுப்பிரமணியம் வியாக்கியானம் செய்திருக்கிறார்

"நமது சமூகத்தில் சுதந்திரமிழந்திருக்கும் மக்களின் உயர்வுக்காகப் பாடுபட வேண்டியது அவசியந்தான்; அப்படிப் பாடுபடும்போது, அதற்கு எழும் எதிர்ப்புகளைச் சமாளிக்க வேண்டியதும் அவசியந்தான்; ஆனால், அந்த லட்சியத்தை அடைவதற்காக, இந்தியாவிலிருந்து திராவிட நாட்டைப் பிரித்துவிட வேண்டும் எனும் கொள்கையை நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது.

"இப்படி அடிப்படையிலேயே திராவிடக் கட்சிக்கும், எங்களுக்கும் வேறுபாடு இருப்பதால்தான், சில முக்கியமான பிரச்சினைகளில்கூட ஒன்றுபட முடியவில்லை,"

என்றும் மந்திரியார் புலம்பி இருக்கிறார்.

"எனவேதான் இந்தியாவில் வாழும் பல பகுதி மக்களிடையே துவேஷத்தையும், பலாத்காரத்தையும் தூண்டும் வகையில் செய்யப்படும் பிரச்சாரத்தை நாங்கள் தடைசெய்ய வேண்டியிருக்கிறது நாடகமூலம் அத்தகைய, பலாத்காரப் பிரச்சாரம் நடைபெறாது தடுக்கவே இச்சட்டம் கொண்டு வரப்படுகிறது,"

என்றும், மந்திரி கருத்தறிவித்துள்ளார்.

'திராவிட நாடு தனியாக வேண்டும்' எனக் கூறும் பிரச்சாரத்தை தடுக்காது சட்டம்,"

என்றும், அவர் கூறிய பிறகு மசோதாமீது ஷரத்துவாரி விவாதம் நடைபெற்றிருக்கிறது.

அந்த விவாதத்தின்போது ஒவ்வொரு ஷரத்திற்கும் ஏராளமான திருத்தங்கள் பல கட்சியினராலும் பிரேரிக்கப்பட்டன வென்றாலும், அவற்றையெல்லாம் சபை நிராகரித்திருக்கிறது.

"கண் மூடிப் பழக்கங்களையும், நம்பிக்கைகளையும் கண்டித்து சீர்திருத்த நோக்கத்துடன் செய்யப்படும் பிரச்சாரங்களைக் கூட சர்க்கார் ஆட்சேபகரமானது எனக் கொள்ளக்கூடாது,"

என்று, திராவிடக் கட்சி உறுப்பினர்கள் பிரேரித்த திருத்தங்களும் தோல்வி கண்டிருக்கிறது.

நிதி மந்திரி சுப்பிரமணியம், பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்வதையும், கடவுள் எதிர்ப்புப் பிரச்சாரம் செய்வதையும் இந்த நாடகச் சட்டம் தடுக்காது என்றும், மக்களிடையே பலாத்காரத்தைத் தூண்டுகிற வகையில் பிரச்சாரம் அமைவதைமட்டுமே அது தடை செய்யுமெனவும் கூறியிருக்கிறார்.

தோழர் கோவிந்தசாமி "இன்று, எது, மக்களின் மத உணர்வைப் புண்படுத்துகிறதெனக் கொள்ளப்படுகிறதோ, நாளை அதுவே மகத்தான சீர்திருத்தமாகக் கொள்ளப்படும்," என்று எடுத்துக்காட்டி, 'ஆட்சேபகரமான கருத்து எது என்பதை எப்படி நிர்ணயிப்பது?' என்று, விவாதத்தின்போது வினவியிருக்கிறார்.

கம்யூனிஸ்டு, திராவிட பார்லிமெண்டரி கட்சியினர், எது ஆட்சேபகரமானது என்பது குறித்தும், நாடகத் தடைச் சட்டத்தை நிர்வகிக்கும் பொறுப்பு யாரிடம் இருப்பது என்பது குறித்தும், இந்தச் சட்டத்தினுல் அதிகாரிகள் தங்கள் இஷ்டப்படி எந்த நாடகத்தையும் தடை செய்கிற அதிகாரத்தைப் பெறுவதைக் கண்டித்தும், பலமான எதிர்ப்புக்காட்டியும் திருத்தங்கள் கொண்டுவந்தும், நாடகத் தடை மசோதா சட்டமாகக் கூடாதென்பதற்குத் தங்களாலான எல்லாவற்றையும் செய்து கடமையாற்றியிருக்கின்றனர்.

என்ருலும், மசோதா மூன்ரும் முறையாக, தொகுத்து விவாதிக்கப்பட்டபின் சட்டமாக்கப்பட்டிருக்கிறது.

## வட நாட்டு....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

"மக்களின் உணவுப் பொருள்கள் மீது அதிகாரம் அனைத்தும் மாநில சர்க்காரிடமே இருக்க வேண்டும்; இது போன்ற திருத்தங்களினுல், மாநிலங்கள் பொறுப்பற்ற நிலையில் வைக்கப் படுகின்றன,"

என்று கஜபதி நாயகர் கூறி மசோதாவை எதிர்த்தார்.

"மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களை மத்திய சர்க்கார் அபகரித்துக் கொள்வதை நான் கடுமையாக எதிர்க்கிறேன்,"

என்று, கே. பாஷ்யம் அய்யங்கார் கூறினுர்.

"விவசாயத்தின் மீது சர்க்கார் அதிகாரம் செலுத்தும்போது இதன் மூலம் தொல்லைகள் ஏற்படும்,"

என்று அவர் மேலும் கூறினுர்.

"அரிசி, கரும்பு இவைகளைப் பொறுத்தமட்டில், கடந்த ஆண்டுகளில் மத்திய சர்க்காரின் போக்கு, மாநில மக்களின் நலனுக்கு உகந்ததாக இல்லை,"

என்று, டி. எம். நாராயணசாமி பிள்ளை கூறினுர்.

"மாநிலங்களுக்கிடையே நிலைமைகள் மாறும்; எவ்வளவுதான் நல்ல நோக்குடன் மத்திய சர்க்கார் பொதுவாக சட்டமியற்றினுலும் அது நன்மை பயப்பதாக இருக்காது,"

என்று, முகமது ரசாகான் எடுத்துக் காட்டினுர்.

விவாதத்திற்குப் பதிலளிக்கையில் அமைச்சர் பக்தவத்சலம், மற்றவர்களைப் போலவே, தாங்களும் மாகாண சுயஆட்சியில் கருத்துள்ளவர்கள் என்ருர்.

ஒரு உறுப்பினர், 'தென்னட்டின் மீது வடநாடு ஆதிக்கம் செலுத்துவது' பற்றி குறிப்பிட்டார். எப்படியாயினும், நாம், சென்னையை ஒரு தனி மாகாணமாக ஒப்புக் கொள்ள வில்லை. சென்னை மாகாணம் தனித்திருக்க வேண்டுமென்று கூறுபவர்கள் இருக்கலாம்; ஆனுல், இங்குள்ள உறுப்பினர்கள், அரசியல் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள்," என்ருர்.

கரும்பு விலைகள் நிர்ணயிப்பதில் மத்திய சர்க்காரின் குறுக்கீடு இருந்ததென்றும், உத்திரப் பிரதேச அரிசிக்கு அதிகப் பணம் கொடுக்க வேண்டி வந்ததென்றும் விவாதத்தின்போது எடுத்துக் காட்டப்பட்டது.

இதற்குப் பதில் அளிக்கும் முறையில், அமைச்சர், கரும்பு விலைகள் நிர்ணயத்தில் மத்திய சர்க்காரின் தலையீடு இருக்கவில்லை என்றும், 1953-லிருந்த நிலைமை தமக்குத் தெரியுமென்றும் கூறினுர்.

மத்தியப் பிரதேச அரிசிக்கு அதிக விலை கொடுக்க வேண்டி வந்தது உண்மையென்றும், இதனுல் திருத்தத்தை எதிர்ப்பது சரியல்லவென்றும், உத்திரப் பிரதேச அரிசி வேண்டாம் என்று சொல்ல மாநில சர்க்காருக்கு சந்தர்ப்பம் இருந்ததென்றும் அவர் குறிப்பிட்டார்.

## கழகக் கூட்டம்

★

மணலூர்

24—12—54 வெள்ளி மாலை

பேசுபவர்:

கே. ஏ. கலையழகன்

### ஜே. எஸ். மாணவர் சங்கம் துவக்க விழா

25—12—54 மாலை 4 மணிக்கு, திருக்கழுக்குன்றம், எண். 47, மேட்டுத் தெருவிலிருக்கும் ஜே. எஸ். மாணவர் சங்கத்தை, தோழர் எஸ். வி. கண்ணன் தலைமையில் தோழர் மு. கருணாநிதி துவக்கி வைத்து, தென்னண்டை மாட வீதியில் அமைக்கப்பட்டிருக்கும் வள்ளுவர் திடலில் சொற்பொழிவாற்றுவார். தோழர் காஞ்சி கல்யாணசுந்தரம் நூல் நிலையத்தைத் திறந்து வைத்து சொற்பொழிவாற்றுவார். மற்றும் பலர் சொற்பொழிவாற்றுவர்.

### திருநெல்வேலி மாவட்ட ஆதிதிராவிட மாணவர் சங்க உறுப்பினர்கட்கு

26-12-54 காலை 10 மணிக்கு பம்பாய், தாராவி, வாழைக்கட்ட [illegible], குடியரசு நிலையத்தில், திருநெல்வேலி மாவட்ட ஆதிதிராவிட மகாஜன சங்கம் பம்பாய் கிளையின் புத்தாண்டு நிர்வாகிகள் தேர்தல் நடைபெறும்.

## இரா. நெடுஞ்செழியன்

சுற்றுப்பயணம்

24-12-54: பரவை (மதுரை மாவட்டம்)

25-12-54: கோவை

26-12-54: திருச்சி

27-12-54: கோவாண்டகுறிச்சி (திருச்சிமாவட்டம்)

30-12-54: சென்னை (ஓட்டேரி)

## 'கலைமகன்'

சென்னை, திருவொற்றியூரில் உள்ள கலை வளர்ச்சி கழகத்தார் 'கலைமகன்' எனும் தமிழ் மாத இதழ் ஒன்றை, தைத் திங்கள் முதல் வெளியிடவிருக்கின்றனர்.

## அடையாள வேலை நிறுத்தம்

பம்பாய், டிச. 19—

இந்திய பிரஸ்டிரஸ்ட் தொழிலாளர்கள் தாங்கள் எந்நிலையில் பணிபுரிந்துகொண்டிருக்கின்றனர் என்பதை பொது மக்களுக்கு எடுத்துக் காட்டும் நோக்குடன், வருகிற டிசம்பர் 23-ந் தேதியன்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்திருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

### திருமதி விஜயலட்சுமி பதவியேற்றார்

திருமதி விஜயலட்சுமி பண்டிட், எலிசபெத் இராணியிடம் இங்கிலாந்தின் இந்திய ஹைகமிஷனராக நியமன அத்தாட்சிப் பத்திரங்களைச் சமர்ப்பித்து பதவியேற்றுள்ளார். இங்கிலாந்தில் இந்தியத் தூதுவர் பதவியேற்கும் முதல் பெண்மணி இவரேயாவார்.

## மதுரை மாவட்ட தி. மு. கழக 2-வது மாநாடு

வரவேற்புக் குழு உறுப்பினர்கட்கு

1955 ஜனவரி 8, 9 தேதிகளில் நடைபெறும் மதுரை மாவட்ட தி. மு. கழக இரண்டாவது மாநாட்டுக்கு மாவட்டக் கழக உறுப்பினர்கள் தங்களுடைய வரவேற்புக் குழு உறுப்பினர் கட்டணம் ரூ. 5-ம் உடனடியாக கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி, தங்களை வரவேற்புக் குழு உறுப்பினராக உறுதிப் படுத்திக்கொள்ள வேண்டுகிருேம்.

முகவரி:—எஸ். முத்து, மாநாட்டுச் செயலாளர், 4, கட்ருபாளையம், மதுரை.

குறிப்பு:—தங்களூர் கிளைக் கழகத்தின் பெயர் பொறித்த கொடியை விரைவில் அனுப்பி வைக்கவும்.

## ரிக்ஷா இழுக்க...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஜூனியர்—சீனியர் போன்ற சிப்பந்திகள் அனைவருக்கும் ஒரே மாதிரி சம்பளம் கொடுக்கப்படும் என்று சர்க்கார் சமீபத்தில் உத்திரவிட்டுள்ளதாம். ஆகவே, அதிகச் சம்பளம் கிடைக்குமென்று எதிர்பார்த்திருந்த சிப்பந்திகள், இதன் மூலம் ஏமாற்றமடைந்தார்கள்; ஆகவே, ஓய்வு நேரத்தில் வேறு வேலைகள் செய்தாவது அதிக வருவாய் பெறலாம் என்று அவர்கள் சர்க்காரின் அனுமதி கோருகின்றனராம்.

## நகர சபை கூட்டத்தில் கறுப்புக் கொடி!

ஆள்வோரைக் கண்டிக்க எதிர்க் கட்சி உறுப்பினர்கள் புதிய முறை

ஜபல்பூர், டிச. 18—

ஜபல்பூர் நகர சபை மண்டபத்துள் இன்று கருப்புக்கொடி ஒன்று பறந்தது பலரையும் குழப்பியது.

எதிர்க்கட்சி உறுப்பினர் ஒருவரின் நாற்காலியில் அந்தக் கொடி நாட்டப்பட்டு பறந்துகொண்டிருந்தது.

தனது 'வார்டு' நலன்கள் அலட்சியப்படுத்தப்படுவதாகப் புகார் கூறி பதவியிலிருக்கும் கட்சியினரின் போக்கை எதிர்ப்பதற்காகவே அவர் கறுப்புக்கொடியைப் பறக்கவிட்டிருப்பதாக அந்த அங்கத்தினர் சமாதானம் கூறியிருக்கிருர்.

"இந்த வழியில் உங்கள் எதிர்ப்பைக் காட்டிக்கொள்ளக் கூடாது" என்று நகர சபை மேயர் கண்டித்து கறுப்புக் கொடியை மண்டபத்தைவிட்டு அகற்றுமாறு கூறியிருக்கிருர்.

ஆனுல் அங்கத்தினர், கொடியை அகற்ற மறுத்துவிடவே, அவரை சபையைவிட்டு வெளியேறுமாறு மேயர் உத்திரவிட்டாராம்.

அங்கத்தினர் கொடியுடன் வெளியேறினுர். ஆனுலும் சபை தொடர்ந்து நடைபெற முடியாது போயிற்று; காரணம், அந்த அங்கத்தினரின் சகாக்களான இதர எதிர்க்கட்சியினரும் சபையை விட்டு வெளியேறிவிட்டதினுல் சபை நடத்துவதற்குத் தேவையான 'கோரம்' இல்லாது போயிற்று.

பின்னர், எதிர்க்கட்சியினர் எல்லாம் கூடி அவசர அவசரமாக ஏதோ பேசிவிட்டு சபைக் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்தனர் எனத் தெரிகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,

# தோழர்களே! பெங்களூர் வாரீர்!

# நாடகத் தடை மசோதா சட்டமாகிறது

## எதிர்க் கட்சியினர் சபையை விட்டு வெளியேறினர்

## நேர்மையான திருத்தங்களும் தோற்றன

## நிதி மந்திரியின் சப்பைக்கட்டு!

சென்னை, டிச. 22—

சென்னை நாடகத் தடை மசோதா பற்றிய விவாதம் சட்டசபையில் நடைபெற்றது. மசோதாவை சட்டமாக்கு வதில் நிதி மந்திரி சுப்பிரமணியம் அளவற்ற அவசரமும் அக்கரையும் காட்டியிருக்கிறர்.

மசோதாவை ஒரு வருட காலத்திற்குப் பின் ஆலோசிக்க வேண்டும் என்று எதிர்க்கட்சியினர் கொண்டுவந்த திருத்தம் தோல்வி யுற்றிருக்கிறது. வாக்கெடுப்பின்போது மசோதாவை ஆதரித்து 107 வாக்குகளும் எதிர்த்து 48 வாக்குகளும் பதிவாகியிருக்கின்றன.

மசோதாவை காங்கிரஸ், முஸ்லீம் லீக், சில சுயேச்சை யாளர்கள் ஆகியோர் ஆதரித்தும், திராவிட பார்லிமெண்டரி கட்சி, கம்யூனிஸ்டு கட்சி ஆகியோர் எதிர்த்தும் வாக்களித் திருக்கின்றனர்.

நேற்று முன்தினம் எதிர்க்கட்சியினர் எழுப்பிய ஆட்சே பங்களுக்குப் பதிலளிக்கும் சந்தர்ப்பத்தை, நிதி மந்திரி சுப்பிர மணியம், தான் நினைத்ததையெல்லாம் பேசுவதற்கு வாய்ப்பாக் கிக்கொண்டிருக்கிறர்.

தான் கொண்டுவந்துள்ள நாடகத் தடை மசோதாவிற்கு எழுந் துள்ள எதிர்ப்பெல்லாம் அரசியல் ரீதியான எதிர்ப்புத்தானென்றும் மற்றபடி, இந்திய அரசியல் சட்டத்திற்கு மதிப்பளிக்கவும் பலாத் காரத்தை வெறுக்கவும் செய்கிறவர்கள் மசோதாவை எதிர்ப்பதற் கொன்றுமில்லை என்றும் தனக்குத்தானே சமாதானம் செய்துகொண் டுள்ளார்.

மசோதாவிற்குத் தாங்கள் கொண்டுவந்த சிறு சிறு திருத் தங்கள்கூட சர்க்காரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்றும், அதனால் சர்க்காரே மசோதாவைச் சட்டமாக்குவதற்கு முழுப் பொறுப்பையும் ஏற்க வேண்டுமெனவும் எடுத்துக்காட்டி, திரா விட பார்லிமெண்டரி கட்சி, கம்யூனிஸ்டு கட்சி ஆகியவர்கள் வெளியேறினர்.

"ஒரு நாடகம் ஆட்சேபனைக் குரியதா என்பதைக் கண்டறிவ தில், நாடகத் துறையில் உள்ளோ ரின் ஆலோசனை கோரப்படும்," என்று மசோதாவைச் சட்டமாக்கி விட்ட மந்திரியார் கூறியிருக்கிறர்.

கம்யூனிஸ்டுகள் மசோதாவை எதிர்ப்பதற்குக் காரணம் என்ன என்பதை, தான் விவாதத்தி லிருந்து புரிந்துகொண்டதாகக் கூறிவிட்டு, மந்திரி சுப்பிரமணியம் மேலும் பேசுகையில், மசோதாவை எதிர்க்கும் இன்னொருசாரார் திரா விடக் கட்சியினர் என்றும், அவர் கள் எதிர்ப்பதற்குக் காரணம், அவர்கள் செய்து வருகிற 'திரா விட நாடு திராவிடருக்கே' எனும் பிரச்சாரம் இந்தச் சட்டத்தால் தடைபடுமோவென அவர்கள் அஞ்சுவதுதான் என்றும் கூறி யிருக்கிறர்.

'மசோதாவிற்கு காட்டப் படும் எதிர்ப்பு, கொள்கை சம்பந்தப்பட்டது; திராவிட நாடு—அதாவது தென்னிந் தியா, இந்தியாவின் இதர பகுதிகளிலிருந்து பிரிந்து தனி நாடாக வேண்டுமென் றும், அங்கு திராவிடர்கள் மட்டுமே வாழவேண்டுமென் றும், திராவிடரல்லாதார் வெளியேற்றப்பட வேண்டு மென்றும் கருதுபவர்கள் திராவிடக் கட்சியினர்; அவர் களின் இந்தக் கொள்கைக்கு எதிரான எந்தச் சட்டத் தையும் எதிர்க்கத்தான் செய்வர்,"

என்று; மந்திரி சுப்பிரமணியம் வியாக்கியானம் செய்திருக்கிறர்

"நமது சமூகத்தில் சுதந்திர மிழந்திருக்கும் மக்களின் உயர்வுக்காகப் பாடுபட வேண் டியது அவசியந்தான்; அப் படிப் பாடுபடும்போது, அதற்கு எழும் எதிர்ப்புகளைச் சமா ளிக்க வேண்டியதும் அவ சியந்தான்; ஆனல், அந்த லட்சியத்தை அடைவதற்காக, இந்தியாவிலிருந்து திராவிட நாட்டைப் பிரித்துவிட வேண் டும் எனும் கொள்கையை நாங்கள் ஏற்றுக்கொள்ள முடி யாது.

"இப்படி அடிப்படையிலேயே திராவிடக் கட்சிக்கும், எங்க ளுக்கும் வேறுபாடு இருப்ப தால்தான், சில முக்கியமான பிரச்சினைகளில்கூட ஒன்று பட முடியவில்லை,"

என்றும் மந்திரியார் புலம்பி இருக் கிறர்.

"எனவேதான் இந்தியாவில் வாழும் பல பகுதி மக்க ளிடையே துவேஷத்தையும், பலாத்காரத்தையும் தூண்டும் வகையில் செய்யப்படும் பிரச் சாரத்தை நாங்கள் தடை செய்ய வேண்டியிருக்கிறது நாடகமூலம் அத்தகைய, பலாத்காரப் பிரச் சாரம் நடைபெறாது தடுக்கவே இச்சட்டம் கொண்டு வரப்படு கிறது,"

என்றும், மந்திரி கருத்தறிவித் துள்ளார்.

'திராவிட நாடு தனியாக வேண் டும்' எனக் கூறும் பிரச்சா ரத்தை தடுக்காது சட்டம்;"

என்றும், அவர் கூறிய பிறகு மசோதாமீது ஷரத்துவாரி விவா தம் நடைபெற்றிருக்கிறது.

அந்த விவாதத்தின்போது ஒவ் வொரு ஷரத்திற்கும் ஏராளமான திருத்தங்கள் பல கட்சியினராலும் பிரரேரிக்கப்பட்டன வென்றாலும், அவற்றையெல்லாம் சபை நிரா கரித்திருக்கிறது.

"கண் மூடிப் பழக்கங்களை யும், நம்பிக்கைகளையும் கண்டித்து சிந்தித்த நோக் கத்துடன் செய்யப்படும் பிரச்சாரங்களைக் கூட சர்க் கார் ஆட்சேபகரமானது எனக் கொள்ளக்கூடாது,"

என்று, திராவிடக் கட்சி உறுப்பி னர்கள் பிரரேரித்த திருத்தங்களும் தோல்வி கண்டிருக்கிறது.

நிதி மந்திரி சுப்பிரமணியம், பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்வதை யும், கடவுள் எதிர்ப்புப் பிரச்சாரம் செய்வதையும் இந்த நாடகச் சட்டம் தடுக்காது என்றும், மக்க ளிடையே பலாத்காரத்தைத் தூண்டுகிற வகையில் பிரச்சாரம் அமைவதைமட்டுமே அது தடை செய்யுமெனவும் கூறியிருக்கிறர்.

தோழர் கோவிந்தசாமி "இன்று, எது, மக்களின் மத உணர்வைப் புண்படுத்துகிற தெனக் கொள்ளப்படுகிறதோ, நாளை அதுவே மகத்தான சீர் திருத்தமாகக் கொள்ளப்படும்," என்று எடுத்துக்காட்டி, 'ஆட்சேப கரமான கருத்து எது என்பதை எப்படி நிர்ணயிப்பது?' என்று, விவாதத்தின்போது வினவியிருக் கிறர்.

கம்யூனிஸ்டு, திராவிட பார்லி மெண்டரி கட்சியினர், எது ஆட்சேபகரமானது என்பது குறித்தும், நாடகத் தடைச் சட் டத்தை நிர்வகிக்கும் பொறுப்பு யாரிடம் இருப்பது என்பது குறித்தும், இந்தச் சட்டத்தினல் அதிகாரிகள் தங்கள் இஷ்டப் படி எந்த நாடகத்தையும் தடை செய்கிற அதிகாரத்தைப் பெறு வதைக் கண்டித்தும், பலமான எதிர்ப்புக்காட்டியும் திருத்தங் கள் கொண்டுவந்தும், நாடகத் தடை மசோதா சட்டமாகக் கூடாதென்பதற்குத் தங்களா லான எல்லாவற்றையும் செய்து கடமையாற்றியிருக்கின்றனர்.

என்றாலும், மசோதா மூன்றாம் முறையாக, தொகுத்து விவாதிக் கப்பட்டபின் சட்டமாக்கப்பட்டி ருக்கிறது.

## வட நாட்டு....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

"மக்களின் உணவுப் பொருள் கள் மீது அதிகாரம் அனைத்தும் மாநில சர்க்காரிடமே இருக்க வேண்டும்; இது போன்ற திருத்தங்களினல், மாநிலங்கள் பொறுப்பற்ற நிலையில் வைக்கப் படுகின்றன,"

என்று கஜபதி நாயகர் கூறி மசோதாவை எதிர்த்தார்.

"மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட் டிருக்கும் அதிகாரங்களை மத்திய சர்க்கார் அபகரித்துக் கொள் வதை நான் கடுமையாக எதிர்க் கிறேன்,"

என்று, கே. பாஷ்யம் அய்யங்கார் கூறினர்.

"விவசாயத்தின் மீது சர்க்கார் அதிகாரம் செலுத்தும்போது இதன் மூலம் தொல்லைகள் ஏற் படும்,"

என்று அவர் மேலும் கூறினர்.

"அரிசி, கரும்பு இவைகளைப் பொறுத்தமட்டில், கடந்த ஆண் டுகளில் மத்திய சர்க்காரின் போக்கு, மாநில மக்களின் நல னுக்கு உகந்ததாக இல்லை,"

என்று, டி. எம். நாராயணசாமி பிள்ளை கூறினர்.

"மாநிலங்களுக்கிடையே நிலை மைகள் மாறும்; எவ்வளவுதான் நல்ல நோக்குடன் மத்திய சர்க் கார் பொதுவாக சட்டமியற்றி ஞலும் அது நன்மை பயப்பதாக இருக்காது,"

என்று; முகமது ரசாகான் எடுத் துக் காட்டினர்.

விவாதத்திற்குப் பதிலளிக்கை யில் அமைச்சர் பக்தவத்சலம், மற்றவர்களைப் போலவே, தாங்க ளும் மாகாண சுயஆட்சியில் கருத் துள்ளவர்கள் என்றார்.

ஒரு உறுப்பினர், 'தென்னட்டின் மீது வடநாடு ஆதிக்கம் செலுத் துவது' பற்றி குறிப்பிட்டார். எப்படியாயினும், நாம், சென் னையை ஒரு தனி மாகாணமாக ஒப்புக் கொள்ள வில்லை. சென்னை மாகாணம் தனித் திருக்க வேண்டுமென்று கூறு பவர்கள் இருக்கலாம்; ஆனல், இங்குள்ள உறுப்பினர்கள், அர சியல் சட்டத்திற்குக் கட்டுப் பட்டவர்கள்," என்றார்.

கரும்பு விலைகள் நிர்ணயிப் பதில் மத்திய சர்க்காரின் குறுக்கீடு இருந்ததென்றும், உத்திரப் பிரதேச அரிசிக்கு அதிகப் பணம் கொடுக்க வேண்டி வந்ததென்றும் விவாதத்தின்போது எடுத் துக் காட்டப்பட்டது.

இதற்குப் பதில் அளிக்கும் முறையில், அமைச்சர், கரும்பு விலைகள் நிர்ணயத்தில் மத்திய சர்க்காரின் தலையீடு இருக்கவில்லை என்றும், 1953-லிருந்த நிலைமை தமக்குத் தெரியுமென்றும் கூறி ஞர்.

மத்தியப் பிரதேச அரிசிக்கு அதிக விலை கொடுக்க வேண்டி வந்தது உண்மையென்றும், இத ஞல் இருத்தத்தை எதிர்ப்பது சரியல்லவென்றும், உத்திரப் பிர தேச அரிசி வேண்டாம் என்று சொல்ல மாநில சர்க்காருக்கு சந் தர்ப்பம் இருந்ததென்றும் அவர் குறிப்பிட்டார்.

## கழகக் கூட்டம்

★

மணலூர்

24—12—54 வெள்ளி மாலை

பேசுபவர்:

கே. ஏ. கலையழகன்

## ஜே. எஸ். மாணவர் சங்கம் துவக்க விழா

25—12—54 மாலை 4 மணிக்கு, திருக்கழுக்குன்றம், எண். 47, மேட்டுத் தெருவிலிருக்கும் ஜே. எஸ். மாணவர் சங்கத்தை, தோழர் எஸ். வி. கண்ணன் தலைமையில் தோழர் மு. கருணாநிதி துவக்கி வைத்து, தென்னண்டை மாட வீதியில் அமைக்கப்பட்டிருக்கும் வள்ளுவர் திடலில் சொற்பொழி வாற்றுவார். தோழர் காஞ்சி கல்யாணசுந்தரம் நூல் நிலையத் தைத் திறந்து வைத்து சொற் பொழிவாற்றுவார். மற்றும் பலர் சொற்பொழிவாற்றுவர்.

## திருநெல்வேலி மாவட்ட ஆதிதிராவிட மாணவர் சங்க உறுப்பினர்கட்கு

26-12-54 காலை 10 மணிக்கு பம்பாய், தாராவி, வாழைக்கட்ட ..., குடியரசு நிலையத்தில், திரு நெல்வேலி மாவட்ட ஆதிதிராவிட மாணவர் சங்கம் பம்பாய் கிளையின் புத்தாண்டு நிர்வாகிகள் தேர்தல் நடைபெறும்.

## இரா. நெடுஞ்செழியன்

சுற்றுப்பயணம்

24-12-54: பரவை (மதுரை மாவட்டம்)

25-12-54: கோவை

26-12-54: திருச்சி

27-12-54: கோவாண்டகுறிச்சி (திருச்சிமாவட்டம்)

30-12-54: சென்னை (ஓட்டேரி)

## 'கலைமகன்'

சென்னை, திருவொற்றியூரில் உள்ள கலை வளர்ச்சி கழகத்தார் 'கலைமகன்' எனும் தமிழ் மாத இதழ் ஒன்றை, தைத் திங்கள் முதல் வெளியிடவிருக்கின்றனர்.

## அடையாள வேலை நிறுத்தம்

பம்பாய், டிச. 19—

இந்திய பிரஸ்டிரஸ்ட் தொழிலா ளர்கள் தாங்கள் எந்தநிலையில் பணி புரிந்துகொண்டிருக்கின்றனர் என் பதை பொது மக்களுக்கு எடுத்துக் காட்டும் நோக்குடன், வருகிற டிசம்பர் 23-ந் தேதியன்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்திருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

## திருமதி விஜயலட்சுமி பதவியேற்றார்

திருமதி விஜயலட்சுமி பண்டிட், எலிசபெத் இராணியிடம் இங்கி லாந்தின் இந்திய ஹைகமிஷன ராக நியமன அத்தாட்சிப் பத்திரங் களைச் சமர்ப்பித்து பதவியேற் றுள்ளார். இங்கிலாந்தில் இந்தியத் தூதுவர் பதவியேற்கும் முதல் பெண்மணி இவரேயாவார்.

## மதுரை மாவட்ட தி. மு. கழக 2-வது மாநாடு

வரவேற்புக் குழு உறுப்பினர்கட்கு

1955 ஜனவரி 8, 9 தேதிகளில் நடைபெறும் மதுரை மாவட்ட தி. மு. கழக இரண்டாவது மாநாட்டுக்கு மாவட்டக் கழக உறுப்பினர்கள் தங்களுடைய வரவேற்புக் குழு உறுப்பினர் கட்டணம் ரூ. 5-ம் உடனடி யாக கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி, தங்களை வரவேற்புக் குழு உறுப்பினராக உறுதிப் படுத்திக்கொள்ள வேண்டு கிறேம்.

முகவரி:—எஸ். முத்து, மாநாட் டுச் செயலாளர், 4, கட்ரூபாளை யம், மதுரை.

குறிப்பு:—தங்களூர் கிளைக் கழ கத்தின் பெயர் பொறித்த கொடியை விரைவில் அனுப்பி வைக்கவும்.

## ரிக்ஷா இழுக்க...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஜூனியர்—சீனியர் போன்ற சிப்பந்திகள் அனைவருக்கும் ஒரே மாதிரி சம்பளம் கொடுக்கப்படும் என்று சர்க்கார் சமீபத்தில் உத்திர விட்டுள்ளதாம். ஆகவே, அதிகச் சம்பளம் கிடைக்குமென்று எதிர் பார்த்திருந்த சிப்பந்திகள், இதன் மூலம் ஏமாற்றமடைந்தார்கள்; ஆகவே, ஓய்வு நேரத்தில் வேறு வேலைகள் செய்தாவது அதிக வருவாய் பெறலாம் என்று அவர் கள் சர்க்காரின் அனுமதி கோரு கின்றனராம்.

## நகர சபை கூட்டத்தில் கறுப்புக் கொடி!

ஆள்வோரைக் கண்டிக்க எதிர்க் கட்சி உறுப்பினர்கள் புதிய முறை

ஜபல்பூர், டிச. 18—

ஜபல்பூர் நகர சபை மண்டபத் துள் இன்று கருப்புக்கொடி ஒன்று பறந்தது பலரையும் குழப்பியது.

எதிர்க்கட்சி உறுப்பினர் ஒருவ ரின் நாற்காலியில் அந்தக் கொடி நாட்டப்பட்டு பறந்துகொண்டிருந் தது.

தனது 'வார்டு' நலன்கள் அலட்சியப்படுத்தப்படுவதாகப் புகார் கூறி பதவியிலிருக்கும் கட்சி யினரின் போக்கை எதிர்ப்பதற் காகவே அவர் கறுப்புக்கொடியைப் பறக்கவிட்டிருப்பதாக அந்த அங் கத்தினர் சமாதானம் கூறியிருக் கிறர்.

"இந்த வழியில் உங்கள் எதிர்ப் பைக் காட்டிக்கொள்ளக் கூடாது" என்று நகர சபை மேயர் கண் டித்து கறுப்புக் கொடியை மண்ட பத்தைவிட்டு அகற்றுமாறு கூறி யிருக்கிறர்.

ஆனல் அங்கத்தினர், கொடியை அகற்ற மறுத்துவிடவே, அவரை சபையைவிட்டு வெளியேறுமாறு மேயர் உத்திரவிட்டாராம்.

அங்கத்தினர் கொடியுடன் வெளியேறினர். ஆனலும் சபை தொடர்ந்து நடைபெற முடியாது போயிற்று; காரணம், அந்த அங் கத்தினரின் சகாக்களான இதர எதிர்க்கட்சியினரும் சபையை விட்டு வெளியேறிவிட்டதினல் சபை நடத்துவதற்குத் தேவை யான 'கோரம்' இல்லாது போயிற்று.

பின்னர், எதிர்க்கட்சியினர் எல் லாம் கூடி அவசர அவசரமாக ஏதோ பேசிவிட்டு சபைக் கூட் டத்தில் கலந்து கொண்டிருந்தின் றனர் எனத் தெரிகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத் துக்காக தோழர் இரா. நெடுஞ் செழியன், எம். ஏ, அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறு கிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,

# தோழர்களே! பெங்களூர் வாரீர்!

